உ

சிவமயம்.

ஸ்ரீ

திருஞானசம்பந்த சுவாமிகள்

அருளிய

# திருக்களர்த் தேவாரத் திருப்பதிகம்.

(பொழிப்புரையுடன் கூடியது.)



(திருஞானசம்பந்தர்)

திருக்களர்

ஸ்ரீ பாரிஜாதவனேசுவர சுவாமி

தேவஸ்தானத்தின் தேவாரக் கல்வெட்டுத்

திறப்பு விழாவின் போது அவ்விழாவின்

நினைவு மலராக

மேற்படி தேவஸ்தானத்தாரால்

வெளியிடப்பெற்றது.

1961

முதற்பதிப்பு.
கலியுகாதி 5062 சார்வரி ஞூ தை மீ.
ஆங்கிலம் 1961 ஜனவரி.

அச்சிட்டோர்:
நேஷனல் அச்சகம்,
தஞ்சாவூர்.

## முகவுரை




" தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லான் மனக்கவலை மாற்ற லரிது. " என அமிழ்தினு மினிய தமிழ்மறை யறிவிக்கும் வண்ணம் தனக்குவமை யில்லாத இறைவனது இடையரு இன்புருவாய தாளைச் சேர்தற்கு மக்கள் அவ்விறைவனைத் துதித்தல் சாதன மாம். அத்தகைய துதிப்பாக்களைத் திருஞானசம்பந்தர் முதலிய ஆசாரியர்கள் பல தலங்கட்கும் பாடியருளி யிருக்கின்றனர். அவற்றுள் பல வளங்களாலுஞ் சிறந்த சோணாட்டிலுள்ள திருக்களர் ஸ்ரீ பாரிஜாதவனே சுவர சுவாமியினது திருத்தலமுமமைவுற்றதாம். இத்தலத்திற்குத் திருஞானசம்பந்தசுவாமிகளால் தேவாரத் திருப்பதிகமும், திருநாவுக்கரசுசுவாமிகளால் க்ஷேத்திரக்கோவைத் திருத்தாண்டகமும் பாடப் பெற்றுள்ளன. பாடித் துதிபுரிவோர் அப்பாடல்களின் உரை யுணர்வுடன் பாடித்துதிக்கின் அவரது மனம் இறைவனுடன் மிகவும் ஒன்றுதலுமாதலால் மேற்படி திருக்களர்த் தலத்திற்குத் திருஞானசம்பந்தர் பாடிய தேவாரத் திருப்பதிகத்தை அதன் உரையுடன் யாவரும் உணரும் வண்ணம் வெளியிட எண்ணங் கொண்டு மேற்படி பதிகத்தை உயர்திரு பண்டித ஸ்ரீ த. நாராயணசுவாமி யவர்கள் தெள்ளிய தமிழில் உள்ளுறை நயங்களுடன் எளிய நடையில் இயற்றியருளிய பொழிப்புரையுடன் மேற்படி திருக்களர்த் தேவஸ்தானத்தின் தேவாரத் திருப்பதிகக் கல்வெட்டுத் திறப்பு விழாவின் நினைவு மலராக வெளியிடுகின்றோம்.

இவ் வெளியீட்டிலுள்ள திருக்களர்த் தேவாரத் திருப்பதிகத்தையும், உரையையும் அன்பர்களனைவரும் உணர்ந்து இடையரு இன்புருவாய இறைவனைத் துதித்துச் சேர்ந்து இன்பப் பேறனைத்தும் பெற்று இனிது வாழ்வார்களாக.

இங்ஙனம்,

**ஸ்ரீ பாரிஜாதவனேசுவரசுவாமி**
**தேவஸ்தானத்தார்,**
திருக்களர்.



உ
சிவமயம்.

# திருஞான சம்பந்தசுவாமிகள்

அருளிய

## திருக்களர்த் தேவாரத் திருப்பதிகம்.

(பொழிப்புரையுடன் கூடியது)

பண்—சீகாமரம்
திருச்சிற்றம்பலம்.

இராகம் - நாதநாமக்ரியா] [தாளம் - சாபு

நீருளார்கயல் வாவிசூழ்பொழில்
நீண்டமாவய லீண்டுமாமதில்
தேரினார் மறுகில்
விழாமல்கு திருக்களர்
ஊருளாரிடு பிச்சைபேணும்
ஒருவனேயொளிர் செஞ்சடைம்மதி
ஆரநின் றவனே
அடைந்தார்க் கருளாயே. 1

1. தம்முள்ளே, நீர் நிறையப் பெற்றவைகளும், கயல்மீன் முதலிய மீன் இனங்களைக் கொண்டவைகளுமாகிய துருவாசர்தீர்த்த முதலிய திருக்குளங்களும், தன்னைச்சுற்றி வளைந்துவிளங்கும் சோலைகளும், நீண்டு வெகுகாலமாக அமைந்து கிடக்கின்ற சிறந்த வயல்களும், உள்மதிலும், வெளி மதிலுமாகக் கூடிச்சுற்றிய பெரிய மதில்களும், ஓடுந்தேர்களாலே அழகு நிறைந்த திருவீதிகளில் நடக்கும் திருவிழாக்களும் நிறையும் திருவூராகிய திருக்களரின் கண்ணே எழுந்தருளியிருக்கின்றவரும், ஊரார்கள் மனமுவந்தளிக்கின்ற பிச்சை உண்டியை விரும்பி ஏற்கின்ற ஒப்பற்றவரும், (இளஞ்

சூரியனைப்போல) விளங்குகின்ற செந்நிறமான சடைமுடியின்கண் சந்திரனை, அவன் மாமன் சாபத்தால் தேய்ந்தொழிந்து போகாமல் வளர்ந்து விளங்கும்படி அணிந்து, என்றும் ஒரே தன்மையுடையவராக நிலை பெற்றவருமாகிய சிவபெருமானே தேவரீரை அடைக்கலமாகக் கருதிவந்த அடியேங்களுக்குத் திருவருள் பாலிப்பீராக.

**தோளின்மேலொளி நீறுதாங்கிய**
**தொண்டர்வந்தடி போற்றமிண்டிய**
**தாளினர் வளருந்**
**தவமல்கு திருக்களருள்**
**வேளினேர் விசயற்கருள்புரி**
**வித்தகாவிரும் பும்படியாரை**
**ஆளுகந் தவனே**
**அடைந்தார்க் கருளாயே.** 2

2. தோள்களின்மேலே வெண்மையான திருநீற்றைப்படிந்து விளங்கப்பூசிய அடியவர்களாகப் பல நாடுகளிலுமிருந்து வந்து, தேவரீருடைய திருவடிகளை வழிபட்டுத்தவஞ்செய்வதற்காக நெருங்கிய நன் முயற்சியுள்ள அன்பர்களுடைய வளருகின்ற தவம் நிறைந்த திருக்களரின் கண்ணே எழுந்தருளியிருக்கின்றவரும், மன்மதனையும் முருகப்பெருமானையுமொத்த அழகையும், வீரத்தையுங்கொண்ட அருச்சுனனுக்கு அருள் செய்த சமர்த்தரும், (முற்பிறப்புக்களிற் செய்த புண்ணியத்தினால்) திருவடியையடைய விரும்புகின்ற அடியவர்களை ஆட்கொள்ள விரும்புகின்றவருமாகிய சிவபெருமானே தேவரீரை அடைக்கலமாகக் கருதிவந்த அடியேங்களுக்குத் திருவருள் பாலிப்பீராக.

பாடவல்லநன் மைந்தரோடு
பனிமலர்பல கொண்டுபோற்றிசெய்
சேடர் வாழ்பொழில்சூழ்
செழுமாடத் திருக்களருள்
நீடவல்ல நிமலனேயடி
நிரைகழல்சிலம் பார்க்கமாநடம்
ஆடவல் லவனே
அடைந்தார்க் கருளாயே. 3

3. புகழ்ப்பாடல்களைப் பாடுதற்கு வன்மை பொருந்திய இளமகாரோடு குளிர்ச்சி பொருந்திய பல வகையான மலர்களைக் குடலையிலெடுத்துக் கொண்டு வந்து (அம்மலர்களாலலங்கரித்து அருச்சிக்கச்செய்து பாடச்செய்து தாமும் பாடி) வழிபடுகின்ற பெருமையுடையவர்கள், என்றும் நிலைத்து வாழப்பெறுவதும், சோலைகள் சூழப்பெறுவதும், செல்வச்சிறப்பு வாய்ந்த மாடங்கள் ஓங்கப்பெறுவதுமாகிய திருக்களரின் கண்ணே எழுந்தருளியிருக்கின்றவரும், வந்துவழிபடும் அடியவர்களை அவர்கள் மலத்தைப் போக்கித்தம்மொடு கலந்து பிரிவுறுமல் நிலைத்தின்புறும்படி செய்யவல்ல வரும், அநாதிமல முத்தரும், திருவடிகளில் வரிசையாக அணிந்த வீரக்கழலும், சிலம்பும் ஆரவாரிக்கும்படி 'பிரமதாண்டவம்' என்னும் திருக்கூத்தைச் செய்ய வல்லவரும்ஆகிய சிவபெருமானே தேவரீரை அடைக்கலமாகக் கருதி வந்த அடியேங்களுக்குத் திருவருள் பாலிப்பீராக.

('நீட' என்பதற்கு அழிவின்றிவாழ்பவரும் எனப் பொருள் கூறினும் பொருந்தும்)

அம்பினேர்தடங் கண்ணினுருட
னுடவர்பயின் மாடமாளிகை

செம்பொ னார்பொழில்சூழ்ந்
தழகாய திருக்களருள்
என்புபூண்டதோர் மேனியெம்மிறை
வாவிணையடி போற்றிநின்றவர்க்
கன்பு செய்தவனே
அடைந்தார்க் கருளாயே. 4

4. அம்பை யொத்தனவும் விசாலமானவையு மாகியவிழிகளையுடைய மங்கையர்களோடு ஆடவர்கள் மகிழ்ச்சியோடு என்றும் தங்கும்படியான மாடங்களோடு கூடிய மாளிகைகளையுடையதும், செம்பொன் முதலிய பொருள்கள் நிறையப்பெற்றதும், சோலைகள் சூழப்பெறுவதால் அழகு வாய்ந்ததும் ஆகிய திருக்களரின்கண்ணே எழுந்தருளியிருக்கின்றவரும், எலும்பை அணியாகத் தாங்குகின்ற திருமேனியையுடையவரும், ஒப்பற்றவரும், எங்கள் தலைவரும், தம்முடைய இரண்டான திருவடிகளை வழிபட்டு நிலைபெறுகின்ற அன்பர்களுக்குத் திருவருள் பாலித்தவருமாகிய சிவபெருமானே தேவரீரை அடைக்கலமாகக்கருதி வந்த அடியேங்களுக்குத் திருவருள் பாலிப்பீராக.

கொங்குலாமலர்ச் சோலைவண்டினங்
கெண்டிமாமது வுண்டிசைசெயத்
தெங்கு பைங்கமுகம்
புடைசூழ்ந்த திருக்களருள்
மங்கைதன்னொடுங் கூடியமண
வாளனேபிணை கொண்டொர்கைத்தலத்
தங்கை யிற்படையாய்
அடைந்தார்க் கருளாயே. 5

5. மணம் விரிகின்ற பூக்களையுடைய சோலைகளிலே வண்டுக் கூட்டங்கள் பூக்களைக் கிளறிச் சிறந்த தேனைப் பருகிப் பண்ணமைந்த இசையை இசைக்கப் பெறுவதும், தென்னை, கமுகு முதலியவைகள் நாற்புறமுஞ் சூழப் பெறுவதும் ஆகிய திருக்களரின் கண்ணே அருள்வடிவாகிய உமையம்மையாரோடு எழுந்தருளியிருக்கின்ற மணவாளரும், ஒரு திருக்கையில் மானையும் மற்றொரு திருக்கையில் மழுப்படையையும் ஏந்தியுள்ளவரும் ஆகிய சிவபெருமானே தேவரீரை அடைக்கலமாகக் கருதிவந்த அடியேங்களுக்குத் திருவருள் பாலிப்பீராக.

கோலமாமயி லாலக்கொண்டல்கள்
சேர்பொழிற்குல வும்வயலிடைச்
சேலிளங் கயலார்
புனல்சூழ்ந்த திருக்களருள்
நீலமேவிய கண்டனேநிமிர்
புன்சடைப்பெரு மானெனப்பொலி
ஆல நீழலுளாய்
அடைந்தார்க் கருளாயே. 6

6. அழகு பொருந்திய சிறந்த ஆண் மயில்கள் (தோகைகளை விரித்து) ஆடும்படியாக மேகங்கள் வந்து படிகின்ற சோலைகள் விளங்கப் பெறுவதும், சேல் மீன்களும், செழிப்பான கயல் மீன்களும் தோன்றித்திரிதற்கேற்ப, நீர் நிறைந்த வயல்களையுடையதும் ஆகிய திருக்களரின் கண்ணே எழுந்தருளியிருக்கின்றவரும், திருநீலகண்டம் உடையவரும், நீண்ட பசையில்லாத சடையையுடைய தவசிகள் தலைவராகச் செழிப்புடைய கல்லால மரத்தினிழலில் அன்று தக்ஷிணாமூர்த்தியாக எழுந்தருளியது போல இங்கும் இன்றும் எழுந்தருளி

யுள்ளவரும் ஆகிய சிவபெருமானே தேவரீரை அடைக்கலமாகக் கருதிவந்த அடியேங்களுக்குத் திருவருள் பாலிப்பீராக.

தம்பலம்மறி யாதவர்மதி
ருங்குமால்வரை யாலழலெழத்
திண்பலங் கெடுத்தாய்
திகழ்கின்ற திருக்களருள்
வம்பலர்மலர் தூவிநின்னடி
வானவர்தொழக் கூத்துகந்தபேர்
அம்பலத் துறைவாய்
அடைந்தார்க் கருளாயே. 7

7. தங்களுடய வல்லமை இவ்வளவு என அறியாமல் அதிக வல்லமையுடையவர் நாம் எனச் செருக்கிய திரிபுர அசுரர்களுடைய மூன்று கோட்டைகளையும், உலகத்தையெல்லாம் தாங்கும்படியான மகாமேருமலையை வில்லாகக் கொண்டு சென்று (புன் சிரிப்பால்) நெருப்புப்பற்றியெரியும்படி செய்து அவர்களுடைய திடமான வல்லமையை யழித்தவரும், பலவளங்களுடைமையால் எங்குமறியப்படுகின்ற திருக்களரின் கண்ணே, தேவர்கள், மணம் விரிகின்ற பூக்களாலருச்சித்து வழிபடும்படி ( துருவாசர் முதலிய முனிவர்கள் பொருட்டாடிய ) திருக்கூத்தை என்றும் பேரம்பலத்தில் செய்துறைகின்றவருமாகிய சிவபெருமானே தேவரீரை அடைக்கலமாகக் கருதிவந்த அடியேங்களுக்குத் திருவருள் பாலிப்பீராக.

குன்றடுத்தநன் மாளிகைக்கொடி
மாடநீடுயர் கோபுரங்கள்மேல்
சென்றடுத்துயர்வான்
மதிதோயுந் திருக்களருள்

3950
Q23



நின்றடுத்துயர் மால்வரைத்திர
டோளினலெடுத் தான்றனீண்முடி
அன்றடர்த் துகந்தாய்
அடைந்தார்க் கருளாயே. 8

8. குன்றுகளையொத்த நல்ல மாளிகைகளிலுள்ள கொடிகள் கட்டிய மேல் மாடங்களும், மிகவுயர்ந்த கோபுரங்களும் மேலே உயர்ந்து போய் நெருங்கி உயர்ந்த ஆகாயத்திலே உலவுகின்ற சந்திரனைத் * தீண்டி விளங்கும்படியான திருக்களரின் கண்ணே எழுந்தருளியிருக்கின்றவரும், நெருங்கிவந்து நின்று உயர்ந்த கைலைமலையைத் திரண்ட தோள்களினலே மேலே தூக்கிய இராவணனது நீண்ட கிரீடத்தை மலையைத்தூக்கிய அப்பொழுதே தகரும்படி செய்து, அவன் அஞ்சித் துதிக்க மனமகிழ்ந்தருள் புரிந்தவரும் ஆகிய சிவபெருமானே தேவரீரை அடைக்கலமாகக் கருதி வந்த அடியேங்களுக்குத் திருவருள் பாலிப்பீராக.

* உயர்வு நவிற்சி யணி.

பண்ணியாழ்பயில் கின்றமங்கையர்
பாடலாடலொ டாரவாழ்பதி
தெண்ணி லாமதியம்
பொழில்சேருந் திருக்களருள்
உண்ணிலாவிய வொருவனேயிரு
வர்க்குநின்கழல் காட்சியாரழல்
அண்ண லாயவெம்மான்
அடைந்தார்க் கருளாயே. 9

9. பண்களோடு கூடிய யாழை அடிக்கடி வாசிக்கும்படி செய்கின்ற பெண்கள், பாடுதலும், ஆடுதலுமாகிய அச்செயல்களோடு மகிழ்ச்சியுற்று நிறையவாழ்கின்ற ஊராகிய, தெளிந்த நிலவை விரிக்கின்ற சந்

திரணைச் சோலைகள் போய்த் * தீண்டும்படியான திருக்களரின் கண்ணே உள்ள திருக்கோயிலினுள்ளே விளங்குகின்றவரும், ஒப்பற்றவரும், பிரமன்மால் இருவருக்கும் அவர் செருக்கை மாற்றி தந்திருவடிஞானத்தை அவர்கட்கருளுவதற்கு திருவுள்ளத்தில் எண்ணி நிறைந்த நெருப்புக்கடவுளாக நிமிர்ந்தோங்கியவரும், எந்தலைவருமாகிய சிவபெருமானே தேவரீரை அடைக்கலமாகக் கருதிவந்த அடியேங்களுக்குத் திருவருள் பாலிப்பீராக.

* உயர்வு நவிற்சியணி.

பாக்கியம்பல செய்தபத்தர்கள்
பாட்டொடும்பல பணிகள்பேணிய
தீக்கியல் குணத்தார்
சிறந்தாருந் திருக்களருள்
வாக்கினுன்மறை யோதினுயாண்
டேரர்சொல்லிய சொற்களானபொய்
ஆக்கி நின்றவனே
அடைந்தார்க் கருளாயே. 10

10. முன் முன் பிறப்புக்களிலே பல நல்வினைகளைச் செய்தமையால் இப்பிறவியில் தம்மை வழிபடுகின்றவராகத் தோன்றிய அன்பர்கள், புகழ்ந்து பாடும் பணி செய்தலோடு பூமாலை புனைதல், அலகிடல், மெழுக்கிடல், திருவிளக்கேற்றல் முதலிய பல பணிகளையும், விரும்பிச் செய்யப் பெறுவதும், அக்கினியை வளர்த்து வழிபடும்படியான தன்மையுடையவர்களான பிறப்பொழுக்கந்தவருத அந்தணர்கள் தங்கட்கு ஒப்புமையில்லாதவர்களாக நிறைந்து தங்கப் பெறுவதுமாகிய திருக்களரின் கண்ணே எழுந்தருளியிருக்கின்றவரும், தமது திருவாயினுலே நான்கு வேதங்களையும் ஓதுகின்றவரும், சமணருஞ், சாக்கியரும் கூறுகின்ற

நூல்களெல்லாம் பயனற்றனவாதலால் அவைகளைப் பொய்யுரைகளாக விளங்கும்படி செய்தவருமாகிய சிவபெருமானே தேவரீரை அடைக்கலமாகக் கருதி வந்த அடியேங்களுக்குத் திருவருள் பாலிப்பீராக.

இந்துவந்தெழு மாடவீதி
பொழில்கொள்காழிந் நகர்க்கவுணியன்
செந்து நேர்மொழியா
ரவர்சேருந் திருக்களருள்
அந்தியன்னதொர் மேனியானை
அமரர்தம்பெரு மானைஞானசம்
பந்தன் சொல்லிவை
பத்தும்பாடத் தவமாமே. 11

11. சந்திரன் வந்து * தங்கி எழுந்து செல்லும்படி உயர்ந்த மாடங்களமைந்த வீதிகளின் அழகைக் கொண்ட சீர்காழி நகரின் கண்ணே கவுணிய கோத்திரத்திலே அவதரித்த திருஞானசம்பந்தன் என்பவன், செந்துருதி என்னும் பண்ணை யொத்த மொழியையுடைய பெண்கள் ( நல்ல ஒழுக்க நெறி தவருமல் ) தங்கும்படியான திருக்களர் என்னுந் திருவூரிலே எழுந்தருளியிருக்கின்றவரும், செவ்வானம் போன்ற செந்நிறமான திருமேனியையுடையவரும் தேவர்கள் தலைவருமாகிய சிவபெருமானைப்பாடிய இப்பாடல்கள் பத்தையும் அன்போடு பாடினுல் பாடுவார்க்குத் தவம் பெருகும்.

* உயர்வு நவிற்சி யணி.

திருச்சிற்றம்பலம்.

# திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிய க்ஷேத்திரக்கோவைத் திருத்தாண்டகப்பதிகம்

## 6-ஆவது பாடல்.

திருச்சிற்றம்பலம்

மண்ணிப் படிக்கரை வாழ்கொளி புத்தூர்
வக்கரை மந்தாரம் வார ணாசி
வெண்ணி விளத்தொட்டி வேள்விக்குடி விளமர்
விராட புரம் வேட்க ளத்தும்
பெண்ணை யருட்டுறை தண்பெண் ணாகடம்
பிரம்பில் பெரும்புலியூர் பெருவே ளூருங்
கண்ணை களர்க்காறை கழிப்பா லையுங்
கயிலாய நாதனையே காண லாமே.

திருச்சிற்றம்பலம்.

---

## தலச் சிறப்பு.

இத்தலம் சோழவளநாட்டுக் காவிரித் தென்பால் (105) நூற்றுஐந்தாவது திருத்தலம். பாரிஜாதவனம் என்னும் மற்றொரு திருப்பெயரையும் உடையது.

திருஞான சம்பந்தமூர்த்தி நாயனுர் திருப்பதிகம் பெற்ற விளக்கமிக்குடையது. பராசரர், காளவர், துர்வாசர் முதலியோர் பூசித்து வழிபட்டு அருளுற்ற சிறப்பினது. இங்கு துர்வாசர் வழிபாட்டிற்கு மகிழ்ந்த இறைவர் வெளிப்பட்டு நடன தரிசனங் கொடுத்து அருள் புரிந்தனர். திருநாவுக்கரசு நாயனுரது க்ஷேத்திரக் கோவைத் திருத்தாண்டகப்பதிகம் 6-வது பாடலும் இதனைப் போற்றுகின்றது.

**ஆலயம்:** அழகிய திருவீதிகள் திருமதில்களாற் சூழ்வுண்டு திருக்கோபுரத் திருவாயிலொடும் கிழக்கு நோக்கித் திகழ்கின்றது.

**மூர்த்திகள்:** இறைவர் ஸ்ரீ களர்முளைநாதர், (அடைந்தார்க்கருள்செய்த நாயனுர் பாரிஜாதவனேசுரர்) அழகிய இலிங்கத் திருவடிவினர். கிழக்கு நோக்கித் திகழ்கின்றனர். இறைவி ஸ்ரீ இளங்கொம்பனுளம்மை (அமிர்தவல்லியம்மை) கிழக்கு நோக்கித் திகழ்கின்றனர். தவிர விநாயகர், தக்ஷிணுமூர்த்தி, சுப்பிரமணியர் இலக்குமி, துர்க்கை, சண்டீசர் முதலாகிய மூர்த்திகளும் உள்ளனர். நடராஜர் துர்வாசருக்குக் காட்சிகொடுத்த வண்ணம் உள்ளனர்.

**பூசனையும் விழாவும்:** மிகச் சிறப்பொடு நடைபெறுகின்றன.

**தல விருட்சம்:** பவளமல்லிகை. இது ஆலயத்துள் உள்ளது.

**தீர்த்தம்:** துர்வாச தீர்த்தம். இது சந்நிதித் திருமுன் திகழ்கின்றது.

**இத்தலம்:** திருத்துறைப்பூண்டி புகைவண்டி நிலையத்திலிருந்து (மன்னுர்குடி செல்லும் கற்சாலை வழி) வட—தென் மேற்கே 10மைலில் உள்ளது.

